வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.

அவர்கள் இயற்றிய

நூற்றொகுதி

# இரண்டாம் பகுதி

# முடிவுறாத பிரசுரங்கள்.

## 1. முத்திராராட்சசம்

# வெளிவராத சில பிரசுரங்கள்

க. தமிழ்மகண் மேகலை
உ. நாமகள் சிலம்பு.
ங. இன்பவல்லி.
ச. கலாநிதி.
ரு. ஞானதரங்கிணி.

*இவ்வைவகை நூற்றொகைகளுக்கும் பதிப்பாசிரியர் சென்னைக் கிறிஸ்தியன் காலேஜ் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்* **வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார்,** *பி. ஏ.,*

## க. தமிழ்மகண்மேகலை:

### கிங்கிணி: ஏ: உமைதிருமணம்—1.

*இது வடமொழியிற் காளிதாஸ மஹாகவி இயற்றிய குமார சம்பவத்தின் முதலேழு சருக்கத்தின் மொழிபெயர்ப்பாகும். இச் செய்யுணூல்* **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்** *பி. ஏ., யாத்தது; விலை ரூ. 1—0—0. விரைவில் வெளிவரும்.*

### கிங்கிணி: அ: அவ்வைக்காட்சி—2.

*இது புதுவழியால் யாக்கப்பட்டுளதோர் இனிய செய்யுணூல்; மெய்க்கோள் பல விளக்குவது.* **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்** *பி. ஏ., இயற்றியது; விலை அணு 0—12—0; விரைவில் வெளிவரும்.*

## உ. நாமகள் சிலம்பு:

### பரல்: ஏ: சூர்ப்பணகை—3.

*இது பிரகசனம் என்னும் ஒருவகை நாடகம். ஈரங்கமுள்ளது; நகைச்சுவை பெரிதும் வாய்ந்தது; எத்தகையோரும் படித்துக் களிகூறத்தக்கது;* **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்** *பி. ஏ., இயற்றியது; விலை அணு 0—6—0; விரைவில் வெளிவரும்.*

### பரல்: கம்: முத்திரா ராட்சசம்—4.

*இது வட மொழியினின்றுந் தமிழில் மொழிபெயர்த்ததோர் நாடகம்; ஏழங்கமுள்ளது;* **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்** *பி. ஏ., இயற்றியது; விலை அணு 0—12—0; விரைவில் வெளிவரும்.*

## ௩. இன்பவல்லி :

மலர்: ௬: இன்னுமா—5.

*இஃது இனிமையும் புதுமையும் வாய்ந்ததோர் தமிழ்க் கதை; யாவர்க்கும் விளங்கத்தக்கவாறு எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டுளது;* **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்** *பி. ஏ., இயற்றியது; விலை அணா 0—8—0; விரைவில் வெளிவரும்.*

## ௪. கலாநிதி :

**கலை: கம்: இழிசினர் வழக்குரை வரையறை—6.**

*இஃது ஆந்திரமொழியில் வேதம் வேங்கடராய சாஸ்திரியாரவர்கள் செய்ததினின்றும் மொழி பெயர்த்துச் செய்யப்பட்டது; நாடகங்களில் இழிசினர் வழக்குரை வழங்கு மாற்றைத் தெளிவுறக் காட்டுவது; நல்ல நடையில் எழுதப்பட்டுளது.* **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்** *பி. ஏ., இயற்றியது; விலை அணா 0—4—0; விரைவில் வெளிவரும்.*

## ௫. ஞானதரங்கிணி :

**தரங்கம்: ௬: வித்தியாவிருத்தி—7.**

*இது சிவ வித்தையைத் தெளிவுறக் கூறுவதோர் அரிய ஞான நூல். வடமொழியினின்று* **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்** *பி. ஏ., மொழி பெயர்த்தியற்றியது; விலை ரூ. 1—0—0; விரைவில் வெளிவரும்.*

*மேற்காட்டிய 7 பிரசுரங்களும் வெளிவருமென்று பிரசுரித்திருந்தபோதிலும், '* **முத்திரா ராட்சசம்** *' என்ற நூலில் ஒரு பகுதி தவிர மற்றவை எவர் கையகப்பட்டு மறைந்தனவோ, கடவுளேயறிவார்.*

---

# முத்திராராட்சசம்

## தற்சிறப்புப் பாயிரம்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

உலகமெலா முவந்தேத்து மொருமுதலை
யுன்னியெந்தை யொளிருந் தாளெந்
தலைமிலைந்து சபாபதிச்செந் தமிழாசான்
றனைவாழ்த்தித் தமிழ் நூலாக
நலமிளிரும் வடமொழியின் முத்திரா
ராட்சசநன் னாடகத்தைப்
புலமைசெறி விசாகதத்தன் புனைந்ததனை
மொழிபெயர்த்துப் புகல் கின்றுமே. (1)

## வாழ்த்து

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

பொன்முடி வாழும் பெண்ணிவள் யார்கொல்
பொலிசசி கலையினள் பெயரென்
சொன்மதி யதுவே யதன்பெய ரறிந்துஞ்
சொல்லென வீமறந் தெவனோ
வின்மதி யன்றிவ் வஞ்சியைக் கேட்டேன்
விசயை சொல்வாள்பிறை யலதேற்
றன்மனைக் கினணங் கங்கையைக் கரப்போன்
சதுர்மொழி காக்கநந் தமையே. (2)

## இதுவு மது

ஒளிர்கழ றம்மா னிலமதோ கதியை
யுறுமெனுப் பையவுங் கடக
மிளிர்தன கரங்க ளவிநயந் தெரிப்பான்
மிசையுயர்த் துழியெலா வுலகுந்
தளிர்தரு மென்னக் குறுக்கியும் விழியார்
சகமிறு மெனச்சின மின்றுப்
புளகமார் புராரி தயங்கியுட் கூசிப்
புலிநடம் புரக்கநந் தமையே. (3)

## முன்னுரை

**சூத்திரதாரன்:—** (ஒருபுறம் நோக்கி) அதனுடன் அமைக. மிகை படக்கூறேல். (திரும்பி) இப்பொழுது **சியாமந்தவடேசுவரன்** றன்பேரனும், பிருதுவின் மகனுமாகிய **விசாகதேவ கவிஞன்** இயற்றிய **முத்திராராட்சசப்** பெரிய நாடகத்தினை யாடும்வண்ணம் சனங்களால் **ஆணையிடப்பெற்றுளேன்.** **ஆதலின்** என்பால் நிகழும்

அவிநயங்கண்டு, காப்பியச் சிறப்பொருங்குணர்ந்த காணுநர் யாவரும் களிசிறப்பாரென்பது மெய்யே. (பாடுகின்றுன்)

தன்னிடம் வித்திடத் தக்க தோர்விதை
யென்னவள் விதைப்பினு மினிதி ருேங்குவா
னன்னில மவனிய் ுட லின்றியே
மன்னெழில் வளம்பெற வளர்க்கு மேயரோ (4)

இப்போது யான் வீட்டிற்குச்சென்று எனது இல்லாளை யழைத்துக்கொண்டு வந்து அவளுடன் யான் சங்கீதகஞ் செய்யப் போகின்றேன். (சிறிது சென்று பார்த்து) என்றன் வீட்டிற்குட் செல்லுகின்றேன். (அவிநயஞ் செய்துகொண்டு நுழைந்து பார்த்து வந்து தனக்குள்) ஏடி! நமது வீட்டிற்குளேதோ பெரிய திருவிழாப் போலக் காணப்படுகின்றதே! அஃதின்றியுஞ் சேவகர்களும் தந்தம் தொழில்களைப் பரபரப்புடனே செய்கின்ருர்களே! இஃதென்னை கொல்? (பாடுகின்றுன்)

சிலர்

தண்ண நீர் கொடு தாம் வரு வார்சிலர்
சன்னிப் பாள் பணச் சாந்தரைப் பார் சிலர்
கண்ணி லாந் தொடை கட்டுகிற் பார் சிலர்
சுண்ண மும் மொலி தோன்ற வி டிப்பரே (5)

இருக்கட்டும் இதைக்குறித்து என் மனைவியை யழைத்துக் கேட்பேன். (நேபத்தி யத்தினுள்ளே யொருபுறம் நோக்கி) குணவதீ! தந்திரசரவீ! தேகசௌக்கியஞ் செய்யவல்லாளே! அறம்பொருளின்ப மாக்குகிற்பாளே! இல்லாண்மை முற்றும் இனி துணர்ந்தாளே! ஒரேயொரு காரியத்தின் பொருட்டுச் சீக்கிரம் வா!

நடி வருகின்ருள்

**நடி:**— ஆரியபுத்திரா! இதோ இருக்கின்றேன்; நினது ஆணையை யேற்று அதன்படி செய்வேன்.

**சூத்திரதாரன்:**— அவ்வாணை நிற்க. மற்று இப்போது பெரியோர்களாகிய பிராமணர்களை யழைப்பதற்கு நமது குடும்பத்தின் கட்காரணமாயிருப்பது யாரோ? அல்லாக்கால், இச்சிறந்த விருந்தினர் நந்தம் மடைத்தொழிற் சிறப்பை யுணர்ந்து இங்கே வந்தனரோ? சொல்.

**நடி:**— ஐய! இச்சிறந்த பிராமணர்களை யானே யழைத்தேன்.

**சூத்திரதாரன்:**— காரணமென்னை? சொல்

**நடி:**— இன்று சந்திரகிரகண மன்ருே?

**சூத்திரதாரன்:**— உனக்கிப்படி யார் சொன்னுர்கள்?

**நடி:—** இப்படியிவ் வூரார் சொல்லிக்கொண்டார்கள்.

**சூத்திரதாரன்:—** ஆரியே! அறுபத்துநாலு கலைகளு மொன்றாகிய சோதிட நூலில் யான் மிகவும் பயின்றிருக்கின்றேன். இடையே, பெரியோர்களாகிய பிராமணர்களைக் கருதி செய்யும் அடிசிற்றொழில்களுமாகட்டும். மற்றைப்படி இன்று சந்திரகிரகணமென்று சொல்லி யாரோ உன்னை யேய்த்துவிட்டனர்! பார்! (பாடுகின்றான்)

சூழ்மதிப் பிறையதாய்ச் சுடருஞ் சந்திரற்
கீழ்மைய கொடியகோட் கேது வோ டுறீஇத்
தாழ்மைய வலிகொடுதாக்குவோ னெவன் ?—

**நேபத்தியத்துள்:—** யானிருக்கும் போது சந்திரனைத் தனது வலியினால் தாக்க விரும்புவோன் யார்?

**சூத்திரதாரன்:—** (பாடுகின்றான்)

வாழ்மதி புதனொடு வதியி லுய்வனே. (6)

**நடி:—** ஐய! இவ்வுலகிலிருந்து சந்திரனைக் (கேதுக்) கோளின் தாக்குதலினின்றுங் காக்க விரும்புவோன் யார்?

**சூத்திரதாரன்:—** அதனை யானுங் கண்டிலேன்: மெய்யே. அது நிற்க. அவன் மீட்டுஞ் சொல்வானானால் அவனது குரலினால் அவனைத் தெள்ளி தினுணர்வோம். (பாடுகின்றான்)

சூழ்மதிப் பிறையதாய்ச் சுடருஞ் சந்திரற்
கீழ்மைய கொடியகோட் கேது வோ டுறீஇத்
தாழ்மைய வலிகொடு தாக்குவோ னெவன் ?

**நேபத்தியத்துள்:—** யானிருக்கும்போது சந்திரனைத் தனது வலியினால் தாக்க விரும்புவோன் யார்?

**சூத்திரதாரன்:—** (கேட்டு) யானறிவேன். கௌடில்லியன்! (நடி பயந்து நிற்கின்றாள்; சூத்திரதாரன் பாடுகின்றான்)

எவன்றன் வெகுளித் தீயதனா
லொழில்கொ ணந்த குலமெரித்தா
னவன்றன் குடில மதியினகத்
தைய மதிக்கி ரகணமென
நுவன்ற சொற்கேள் விப்படலு
நுண்மௌ ரியசந் திரகுத்த
னவன்றன் பகைஞர் தாக்கலென்றே
ரரிய பொருளுட் கொண்டனனே

ஆகவே நாம் போவோம். (7)

[இருவருஞ் செல்லுகின்றனர்.]

## அங்கம்—I முதற்களம்

(**சாணக்கியன்** *தன் குஞ்சியை விரித்துக் கையினலதை யுருவிக் கொண்டு வருகின்றான்*)

**சாணக்கியன்:—** *யான் இருக்கும்பொழுது தனது வலிகொண்டு சந்திரகுப்தனைத் தாக்குவதற்கு விருப்பங் கொள்பவன் யாவன்? சொல். (பாடுகின்றான்)*

*கூய வேழத்தைக் கொன்றிழி சோரிபே*
*றாய வாய்மடுத் தல்கந்திச் செம்மதிச்*
*சீய வாயிற் செழிபற் பிடுங்கிட*
*மேய சிந்தை விரும்புநன் யார்கொலோ?* (8)

மேலும், (பாடுகின்றான்)

*நந்தர் தங்குலத் திற்குமா விடஞ்செறி நாக*
*நந்து கோபச்செந் தீவளர் நற்புகைக் கொடியென்*
*விந்தை யார்சிகை விரிந்திடல் விழைதர லின்றிப்*
*புந்தி யற்றுத்த னுயிரினைப் போக்குவோன் யாரே?* (9)

அன்றியும், (பாடுகின்றான்)

*கோனக் தக்குலக் கானங் கொளுத்துமென்*
*மான் மார்சின வாளெரி யூடுபோய்த்*
*தானக் தம்முற்றுச் சாவுஞ் சலபம்போ*
*லூன மெய்துமா றுள்விழை மூடன்யார்?*

*சார்ங்கரவா! சார்ங்கரவா!*

*மாணவன் வருகின்றான்*

**மாணவன்:—** *ஐயா! உத்தரவிடுக.*

**சாணக்கியன்:—** *மைந்த! யான் வீற்றிருக்க விரும்புகின்றேன்.*

**மாணவன்:—** *ஆசிரிய! வாயிலருகிலுள்ள அவைக்குழுமிடத்தில் ஒரு பிரப்பிருக்கை யுளது. அது தாங்கள் வீற்றிருக்கத் தக்கது.*

**சாணக்கியன்:—** *மைந்த! மிகத் தலைமையான சில தொழில்களில் முயன்று மனமுளையா நின்றேன்; மற்று மாணுக்கர் கீழ்ப்படியாமை யினு லன்று. (ஓராதனத்திலிருந்து தனக்குள்) இந்தச் செய்தி யெவ்வாறு சனங்களுக்கு வெளியாயிற்று? இராட்சசனே நந்தகுலம் அழிந்ததனுற் கோபங்கொண்டு, பருவதகேசனுகிய தன், தகப்பன் கொலையுண்டதனுல் முன்னரே வெகுண்டுள மலயகேதுவையடுத்து "உன்னை நந்த ராச்சிய முழுதிற்கும் மன்னவனுக்கி உனக்குப் பட்டங் கட்டுவேன்" என்று சொல்லி, அப்படிச் சொல்லியதனை முற்றுவிக்கும்படி பல மிலேச்ச ராசகர்களைத் துணை வலியாகக் கொண்டு விருஷலனுகிய சந்திரகுப்தனைத் தொலைக்க விரும்புகின்றான். மற்று நந்த வமிசத்தைத் தொலைக்குமாறு யான் செய்த பிரதிஞ்ஞையோ*

உலகம் முழுவதும் அறிந்ததே. அவ்வாறே கடத்தற் கரிய பிரதிஞ்ஞை யென்னும் யாற்றிணையுங் கடந்தேன். அது நிற்க, உலகம் அறிந்த இச் செய்தியை அவர்கள் மறக்கும்படி செய்ய எனக்கு வல்லமை யில்லையோ?— (மௌனம்). இஃதெனக் கேன்? (பாடுகின்றான்)

நந்தகுலக் கானையென்றன் வெகுளிச் செந்தீ
    நனிமடுத்துத் துயர்மேக நண்ணர் மாத
ரிந்துமுகந் தமைக்கரிய வாக்கி யென்ற
    னிருஞ்சூழ்ச்சிக் காற்றினெழூஉ மடமை நீற்றான்
மந்திரிமா ரெனுமரங்க டம்மைமூடி
    வாழ்ந்தசனப் பறவைகளைக் கலக்கியோட்டி
நந்துவதோய் தவினன்று பற்றி மேன்மே
    னலிவின்றி யெரியவிட னின்மை யானே. (11)

ஏவலர்மன் னவர்க்கஞ்சி யுயரிருக்கை
    யிருந்தவனைச் சீயென்று நீத்த வன்றைப்
பாவமிஃ தென்றுமிகத் துயர் கூர்ந் தம்ம
    பரிவினொடு தலைகுனிந்து பார்த்தோர் தாமே
மாவலிய வரியேறான் றரசு வானை
    மலையுச்சி தனினின்று முருட்டி யாங்குச்
சாவநந்தக் குலமுழுதும் யானழித்த
    தகையையின்று தலைநிமிர்ந்து காண்க மாதோ. (12)

இப்போது என்றன் சூட்பாரம் நீங்கிற்று. ஆயினும் விருஷலன் (விடலை) பொருட்டு இன்னுஞ் சஸ்திரங் கைக் கொள்கின்றேன். — (பாடுகின்றான்)

உலகத்தி னிதயமுதி யொன்பா னேய்க
    ளொக்குநவ நந்தர்களு மொழிந்து போனு
ரிலகுபுனற் றடத்தினின்மா மலர்தா னூன்றி
    யிருந்திடல்போற் றிருமகளு மௌரி யன்பா
னலமுடனே வீற்றிருக்கின் றனளஃ தல்லா
    னட்பாளர் பகைஞரெனு மிருவர் கட்குந்
தலையன்பு பகையென்ற பலன்க டாமே
    சமமாகப் பகுத்திடப்பட் டனவே யன்றோ? (13)

அவ்வாறே யான் நந்தர் குலத்தை வேரோடு களைந்தும் பய னென்னை? யான் இராட்சசனை யடக்காதிருக்குங்காறும், திருமகளைச் சந்திரகுப்தனோடு சேர்த்திருந்தாலும் பயனில்லை.— (யோசிக்கின்றான்) ஓ! நந்தர் குலம் நாசமுற்றும், இராட்சசன் அவர்கண் மீது வைத்துள அன்பிற்கோ அளவில்லை! நந்த குலத்திற்குத் தூர பந்துவாக வேனும் ஒருவனிருக்கின்ற வரைக்கும் அவன் எனக்குப்

பகைஞனே. விருஷலனக்கு அமைச்சனுந் தன்மையை யடைதற்கு இன்னும் அவன் அருகனல்லன். எனது சூழ்ச்சியினால் இராட்சசன் சந்திரகுப்தனைத் தாக்குதலினின்றுந் தவிருமாறு முயற்சி செய்தல் வேண்டும். துணையற்ற நந்த வமிசச் சருவார்த்தசித்தி வானப் பிரஸ் தாசிரம முற்ற போதினுங் கொல்லப்பட்டனன். அங்ஙன மிருப்ப வும், இராட்சசன் மலயகேதுவோடு கூடி என்னைத் தாக்குவான் மிகவும் முயலுகின்றனன். — (வெள்ளிடையை நோக்கி) ஓ! இராட்சச! நல்லமைச்ச! சாதுவே! மக்களுட் பொன்னே! நன்று! நன்று!! ஆ! — (பாடுகின்றான்)

சேவகரிவ் வுலகதனிற் பொருள்வி ழைந்தே
செவ்வுர்தம்மாற் றெழில்புரிகின் றாரனார்தா
மாவலிற்போ கூழ்ப்பொழுது மவர்ச்சேர் கின்று
ரவர்மீட்டு மந்நிலையை யடைவா ரென்றே
மேவரிது நிற்போலத் தலைவன் றன்ன
வினைப் பொறையை யவன்செய் நல நினைந்து தங்கட்
சாவநன்மை நோக்காது பத்தியோடு
மவனிறந்த பினுந்தாங்கு வோரை யம்மா! (14)

இப்பொழுது யான் செய்ம் முயற்சியெல்லாம் உன்னைச் சந்திர குப்தன் பாற் சேர்த்திடல் கருதியே. இந்த விருஷலனுக்கு அமைச் சனாவகனா லெப்படி நன்மையுண்டாகும்? — (பாடுகின்றான்)

அறிவிலிவீர மிலியிவர் தம்மோ
டன்பு செய் வதிற்பய னென்னை
யறிவோடு வீர மிருந்தென்ன பயனோ
வன்புறு பத்தியோன் றிலதே
லறிவோடு வீரம் புத்தியு மொருங்கே
யமைந்திடு சேவகர் தாமே
பிறிதரா மனைவி போலெப்போழ் தத்தும்
பிரியமுற் றிருப்பவ ரன்றே. (15)

ஆதலின் யானும் இவ்விஷயத்திலுறங்குகின்றிலேன். அவனை வசப்படுத்தும் வண்ணம் என்னாலியன்ற மட்டும் முயலா நின்றேன். அது நிற்க, விருஷலன், பர்வதகேசன் ஆகிய இவர் தம்முள் எவனே னும் ஒருவனது நாசத்தினாற் சாணக்கியனைச் சிக்கெனப் பிடிக்கலா மென்று எண்ணங்கொண்ட இராட்சசனே எங்களுக்கு மிக்கவுப காரியும் நண்பனுமாயிருந்த துணையற்ற பர்வதகேசனை விஷகன்னிகை (கடுமகள்) யினாற் கொன்றனனென்று அவன்மீது பழி பிறப்பித் தேன். அதுவும் அவ்வாறே யுலகிற் பரவாநின்றது. பர்வதகேசன் மகனாகிய மலயகேது "சாணக்கியனால் நின் தகப்பன் கொலையுண் டான்" என்று வாகுராயணன் சொல்லக் கேட்டு பயந்தோடி விட்ட னன். இவன் இராட்சசனோடு கூடி, அவன்றன் புத்தி சாதுரியத்

தினுலே யுதவிபெற்று நம்மை யெதிர்ப்பினும் எதிர்க்கலாம். அவனை மீட்டுங் கொல்லப்புகின் அஃதாவது இராட்சசனே பர்வதகேசனைக் கொன்ருன் என்று பரவியுள பழியை மாற்றிவிடும். மேலும் நண்பர் பகைஞரென்று மிருதிறத்தாருள்ளும் உண்மையுள்ளாரையும் உண்மையுள்ளார்போல நடிப்பவரையும் ஆராய்வேண்டுமென்ற ஆசையுடையாரும், பல நாட்டினரும், பல வகைப் பாஷைகள் பேசுநரும், பல்வித நடையுடையாளரும், பல மாறு வேஷக்காரருமாகிய ஒற்றர் பல்லோர் என்னு லனுப்பப்பட்டுளர். குசுமபுரக் குடிகளுக்குள் நந்தனும், அவன மைச்சனுமாகிய இவர்பால் அந்தரங்க நேசமுள்ளோரைப் பொருளாராய்ச்சியின் மிகத்தேர்ந்த என்ற னெற்றர் ஆய்ந்து கொண்டிருக்கின்றனர். பத்திரபடன் முதலிய பிரதான புருஷர்களாகிய சந்திரகுப்தனது நன்மையையே நாடுவோர் தத்தஞ் செயல்களின் பயனை யென்னிடத் துரைத்துத் தத்தமது ஆசையைப் பூர்த்தி செய்து கொண்டனர். அரசன தின்பத்திலேயே கருத்தும், அரசன தருகினின்று நீங்காமையும், பரீட்சித்து உண்மை யென்றறிந்த பக்தியும், மிகுந்த சாக்கிரதையும் உள்ள என் மனிதர்கள் பகைஞன் அனுப்பும் விஷங்கலந்த பானங் கொடுப்பவரைத் தவிர்க்குமாறு நியமிக்கப்பட்டுளர். — என்றன் சகபாடியும் நண்பனுமாகிய விண்டுசன்மன் என்பான் னெருவனுளன். அவன் உச்சை நூலினினும், தண்ட நீதியிலும் எண்ணெண் கலைகளுளொன்றென வியம்புஞ் சோதிடத்தினும் மிகத்தேர்ந்தவன்; இராட்சசனுக்கு மிகவும் ஆப்தனும், நந்தனது மற்றை மந்திரிகள் யாவருக்கும் நண்பனுமாவான். அவன் நந்த குலத்தையறுக்குமாறு யான் செய்த சூள் முடிந்த பின்னர்க் குசுமபுரத்திற்கு வந்து அமண் வேடம் பூண்டு உலவாநின்ருன். அன்றியும் அவன் இப்பொழுது ஒரு பெருந்தொழில் செய்து முடிக்கப் போகிருன். அப்பொழுது பிறர் நகையாடற் பாலதாகும் ஈனமொன்றும் நம்பாலுள்ளதாகாது.— மற்று, விருஷலனோ வெனில், இராச்சிய முழுதும் முதலமைச்சனுகிய வென்பால் ஒப்பித்து விட்டு கவற்சி யற்றிருக்கின்றனன். அன்றியும், ஓரரசனை அவன்ருனே யிராச்சிய காரியங்களை யெல்லாம் பார்ப்பதனுனுள வாந்துக்கங்களடைய வொட்டாமல், மந்திரிமார் அரசன் இராச்சிய பரிபாலனஞ் செய்தவன் கண் உதவி புரியின், அத்தகைய இராச்சிய நன்னிலையிலே லேசியிருக்கும்.— (பாடுகின்ருன்)

உரிமைசா லடன்மிக வுளவராயினு
நகர விந்திரர் நலத்த நாடுக
ளருமதிப் பிறர்துணை யன்று கர்ப்பரேற்
பெரியவர் துயர்நிலைப் பேதுற் ருரரோ (16)

[சாணக்கியன் போகின்ருன்.

முதற்களம் முற்றிற்று.

அங்கம்—I இரண்டாங்களம்

நிபுணக னென்னு மோரொற்றன் யம படத்தைக் கையிலேந்திக் கொண்டு வருகின்றான்.

**ஒற்றன்:—** (பாடுகின்றான்)

மற்றைய தேவர்தம் பத்த மாந்தரைச்
செற்றனு ருயிர்கொடு செல்லுகின்றதான்
மற்றைய தேவரை வணங்கு வானெவன்
பற்றியான் காலனைப் பணிகின் றேனரோ. (17)

துன்ப மெய்தினுந் தொல்சம னுர்கழன்
மன்ப ணிந்தவர் வாழ்க்கைக ணல்லவாங்
கொன்ப டைக்கலங் கொண்டுகொல் வானவன்
றன்ப தத்துணை தம்மை வழுத்துவேன். (18)

ஆகையால் யானிவ் வீட்டிற்குட் புகுந்து யம படத்தைக் காட்டிப் பாடுகின்றேன்.

[சாணக்கியனது வீட்டினுட் செல்லுகின்றான்]

**மாணவன்:—** (அவனை நோக்கி) நண்ப! உட் செல்லாதே

**ஒற்றன்:—** ஏ! பார்ப்பான்! யார் வீடிது?

**மாணவன்:—** மிகச் சிறந்த பெயர்வாய்ந்த என்றன் ஆசிரியர் வீடிது.

**ஒற்றன்:—** (சிரித்துக்கொண்டு) இஃதென் றன் அறத்துணைவன் வீடா மாதலி னென்னைப் புக விடுவாயோ? உன் றனுவாத்தியா னுக்குத் தன்மோபதேசஞ் செய்கின்றேன்.

**மாணவன்:—** (வெகுண்டு) சீ! அறிவிலி! என் றனுசிரியனினும் நீ யற நூலினற வல்லை கொலோ?

**ஒற்றன்:—** ஏ! பார்ப்பான்! கோபித்துக்கொள்ளாதே! யாவ ரும் யாவற்றினும் வல்லவராகார். ஆகவே உன் உவாத்தியானுக் கேதோ கொஞ்சந் தெரியும். அது போலவே என்போலியருங் கொஞ்சந்தா னறிவார்கள்.

**மாணவன்:—** (மிக வெகுண்டு) ஏடா! மூர்க்கா! முற்று முணர்ந்த வென்னுசிரியரிடத்தி னின்றுங் (கல்வியைக்) கவர்ந்து கொள்ளவோ விரும்புகின் றனை?

**ஒற்றன்:—** ஏ! பார்ப்பான்! உன் றனுவாத்தியானுக் கெல்லாந் தெரியுமென்கிருயே! சந்திரனை வெறுப்பவன் யாவனென்று தெரியுமா?

**மாணவன்:—** *ஏடா! மூர்க்கா! இதனையறிவதனு லென்றன் குறவர்க்கு யாது பயன்?*

**ஒற்றன்:—** *ஏ! பார்ப்பான்! உன்றனுவாத்தியான் அறிய வேண்டுவதனையறியான். கமலன் சந்திரனை வெறுக்கின்ற தென்பதை மாத்திர முணர்வாய். இதோ பார்:— (பாடுகின்றுன்)*

*செவிய் பங்கயஞ் சீரிதே*
*சவிய சந்திரன் ருன்வர*
*வலிய வுட்களிப் பன்றிறே*
*குவியு மாறுளங் கோடியால்.* (19)

*(சாணக்கியன் கரந்து வருகின்றுன்)*

**சாணக்கியன்:—** *(கேட்டுத் தனக்குள்) நன்று! சந்திரகுத்தனுக்கு விரோதிகளை யிவன் மூலமா யறிவேன்.*

**மாணவன்:—** *ஏ! மூர்க்கா! என்னை யொன்று கிடக்க வொன்று பேசுகின்றனை?*

**ஒற்றன்:—** *ஏ! பார்ப்பான்! இது சமயத்துக் கேற்றதுதான் ஆனல்—*

**மாணவன்:—** *என்ன?*

**ஒற்றன்:—** *என் பேச்சைக் கேட்பவர் அதனைத் தாமே யறிந்து கொள்ள வேண்டும்.*

**சாணக்கியன்:—** *(வெளியாய்) நண்பா! தடையின்றி யுள்ளே வருதி! உன் பேச்சைக் கேட்டறிபவனைப் பெறுவாய்.*

**ஒற்றன்:—** *நான் உள்ளே போகின்றேன் (உள்ளே போயணுகி) வெல்க, வெல்க!! ஆரியா!*

**சாணக்கியன்:—** *(தனக்குள்) நிபுணகன் இன்ன காரியத்தின் பொருட்டு அனுப்பப் பட்டன னென்று யானறிகிலேன்— (மௌனம்) ஓ! உணர்ந்தேன்! உணர்ந்தேன்!! சனங்களது கருத்தையும், நோக்கத்தையும் அறியுமாறு அனுப்பப்பட்டான் நிபுணகன்! (வெளியாய்) நண்பா! மிகவும் நன்று! இப்படி யிருப்பாய்.*

**ஒற்றன்:—** *எசமான்க ளுத்தரவுப் படி.*

*(தரை மீ திருக்கின்றுன்)*

**சாணக்கியன்:—** *நண்பா! உன்னை யனுப்பிய தெதன் பொருட்டோ அதனைக் கூறுக. பிரசைகள் விடலற்கு விரோதிகளா?*

**ஒற்றன்:—** *நன்று. நமதையன் சந்திரகுப்தனுற் றமது சோக நீங்கிய சனங்கள் அவன் மாட்டுறுதிபு மன்பு முடையா ராயினர்,*

ஆயினும் அமைச்சனும் இராட்சசனை யடுத்தார் மூவர் இந்நகரின் கணுளர். அவர் நந்தனுஞ் சந்திரகுப்தன் அரசாளல் பொறார்.

**சாணக்கியன்:—** (வெகுண்டு) தாம் வாழல் சகியாரென்று சொல்லுதி—நண்ப!—அவர்கள் யாவர்?

**ஒற்றன்:—** அவர் தம் பெயர்களின்ன வென் றுணர்கிலாது தங்கள் பாலிதனை யான் சொல்லவும் வருவலோ?

**சாணக்கியன் :—** அவர் தம் பெயர்களை யறிய விரும்புகின்றேன்.

**ஒற்றன்:—** ஐய! இதனைக் கேள். முதலாவன் ஒரு சமணன்; நடுவு நிலைமை குன்றாது அவர்களைச் சேர்ந்துளான்.

**சாணக்கியன்:—** (தனக்குள்) நந்தம் பகைஞன்பா லன்புடைய சமணன்! (வெளியாய்) அன்னான் பெயரென்னை சொல்?

**ஒற்றன்:—** அவன் பெயர் 'சீவ சித்தி'.

**சாணக்கியன்:—** அன்னான் நந்தம் பகைஞர் பாலனென் றெங்ஙன முணர்ந்தனை?

**ஒற்றன்:—** அமைச்சன் ராட்சசனு லனுப்பப்பட்ட விஷ கன்னிகையைக் (கடுமகளைக்) கொண்டு பர்வதேசுர ராசனை யவன் கொன்றமையா லுணர்ந்தேன்.

**சாணக்கியன்:—** (தனக்குள்) சீவசித்தி யென்ற னொற்றனன்றே! (வெளியாய்) நண்ப! இரண்டாவன் யாவன்?

**ஒற்றன்:—** மற்று, அவன் அமைச்சன் ராட்சசனுக்கும் மிகப் பிரிய முள்ளவனும், காயஸ்தனுமாய 'சகடதாஸன்' என்போன்.

**சாணக்கியன்:—** (தனக்குள் நகைத்து) காயஸ்தன்!—ஓரிலகு மாத்திரை. பகைவனுயினும் அவ்வாறு சொல்வது தக்க தன்று. அவன் பால் நமது நண்பன் சித்தராத்தகனை நியமித்திருக்கின்றேன். (வெளியாய்) நண்ப! மூன்றுவனின்னனென் றறிய விரும்புகின்றேன்.

**ஒற்றன்;—** (நகைத்து) மூன்றுவனோ வெனின் அவன் அமைச்ச ராட்சசனுக் கிரண்டாவ திதய மாவான், புட்புரத் துறைவோன், வணிகர் தந்தலைவன்; சந்தனதாஸப் பெயரினன். இராட்சசன் நகரை விட்டோடும் போது அவன் வீட்டின் கண்ணேயே தன் மனைவி முதலாயினுரை விட்டுவிட்டுப் போயினுன்.

**சாணக்கியன்;—** (தனக்குள்) இவனிராட்சசனுக்கு ஆன்மநேய னல்லனேல் அவனிவன்பாற் றன்மனைவியை விடுத்துப் போகான். (வெளியாய்) சந்தனதாஸன் வீட்டிலே யிராட்சசன் றன் மனைவியை விட்டுப் போயினனென்று எப்படி யறிந்தனை?

**ஒற்றன்;—** *ஐயா! இம் முத்திரை மோதிரத்தினாலேயே யானறிந்தேன். (மோதிரத்தைக் கொடுக்கின்றான்)*

**சாணக்கியன்;—** *(முத்திரை மோதிரத்தை வாங்கிப் பார்த்து வாசிக்கின்றான்.) இராட்சசன்.— (தனக்குள் நகைத்து) இனி யிம் மோதிரத்தினாலே யிராட்சசனைப் பிடித்துக் கொண்டேன். (வெளியாய்) நண்ப! நீ யெவ்வாறிதனை யடைந்தனை? அதனைச் சாங்கோபாங்கமாய்க் கேட்க விரும்புகின்றேன்.*

ஃ ஃ ஃ

*(இதற்குமேல் கையெழுத்துப் பிரதியோ அச்சுப் பிரதியோ கிடைக்கவில்லை)*

ஃ ஃ ஃ

*இந்நூலாசிரியரியற்றிய 'மதிவாணன்' என்ற புதுவது புனைந்ததோர் செந்தமிழ்க் கதையில் வெளியிடப்படாத ஒரு* **விநாயகர் வணக்கம்** *குறித்த வெண்பாவொன்று 20—8—1897-ம் வருஷம் இயற்றப்பட்டு ஞானபோதினி என்ற சஞ்சிகையில் முதல் சம்புடத்தில் முதல் இதழில் அட்டையில் 3-ம் பக்கத்தில் வெளிவந்திருக்கிறது. அதைக் கீழே காண்க.*

ஃ ஃ ஃ

## மதிவாணன் கதை

### விநாயகர் வணக்கம்

நேரிசை வெண்பா.

*தன்மமெழில் வீரமன்பு தாமொருருப் பெற்றவெனு*
*நன்மதிவா ணத்தலைவ னுமத்தாற்—சொன்மதிக்குஞ்*
*செந்தமிழின் வாசகத்தோர் செய்யகதை சொல்லவருட்*
*டந்துதவும் வாரணத்தின் றாள்.*

*20—8—'97*

'வர்ணவைத்திய சாஸ்திரம்'
என்ற நூலைப்பற்றி,
சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ்
தமிழ்த் தலைமைப் பண்டிதர்
**வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், B. A.**
சொல்லிய

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பூமகள் பொலியுந் திருவையா றதன்கட்
புனிதமா ரனந்தைய னீன்ற
பாமருஞ் சாமி நாதவேட் சுகுணன்
பன்மொழி பயின்றநற் பனவன்
மாமகிழ் வெய்தி மதிகொடு வண்ண
வைத்திய நூலினை வகுத்தான்
பாமரர் கலைஞர் யாவரும் படித்துப்
பயன்பெற்றுச் சுகமுற மாதோ.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய முடுகு விருத்தம்.

என்னை மனங்களி மேவுபு கேண்மினெ னின்றமிழ் நாட்டினர்காள்
மன்னுறு வண்டமிழ் மாமொழி யிற்பல வாகட நூல்களுளே
நன்ன ரியற்றிய வண்ண வயித்திய நாம முறுந்தனி நூ
லின்ன லொழித்திடு மின்ப மளித்திடு மேரும் விளைத்திடுமே.

20—1—'98.

ஃ ஃ ஃ

வைகுண்ட ஏகாதசி தினத்தில் திருவல்லிக்கேணி **ஸ்ரீ பார்த்த சாரதிப் பெருமாளைத்** தரிசிக்கப்போன சந்தர்ப்பத்தில் இப்பாடல் வி. கோ. சூரியநாராயணச்ாஸ்திரியரால் இயற்றப்பட்டது.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய முடுகு விருத்தம்.

சீர்த்த செங்கம லத்தி னிற்றிகழ் தேவி கட்கடை நோக்கமுங்
கூர்த்த புந்தியு நோயி லாமை குலாவு தேகமு மேவுமே
நார்த்த லைப்படு நாத னெம்பர நார ணப்பெரு மானெனும்
பார்த்த சாரதி பாத தாமரை பண்பி னிற்றொழு வேயரோ.

20—1—'98.

இந்நூலாசிரியரியற்றிய தமிழ் வியாசங்கள் என்ற நூலில் ஏழாம் பகுதியான 'சொற்பொருளாராய்ச்சி' என்ற வியாசம் ஞான போதினிப் பத்திரிகையில் வெளிவந்தது. அவ்வியாசத்தைப்பற்றிய ஒருவரது அபிப்பிராயம் கடிதமூலமாக ஞானபோதனிப் பத்திரிகை யில் வெளிவந்திருக்கிறது அதைக் கீழே காண்க:

**கடிதம்.**

**தமிழுலகர்க்காத் தந்த விண்ணப்பம்.**

பிரம்ஸ்ரீ சூரியநாராயண சாஸ்திரிகளாகிய பரிதிமாற்கலைஞரவர் கட்குத் தமிழுலகோர் பொருட்டுத் தந்த விண்ணப்பம்:

சென்ற ஞானபோதினிச் சஞ்சிகைகளுளொன்றில் தாங்கள் அறு என்ற தாதுவைக் கொண்டாய்ந்த பகுபத முடிவுகளைக் கண்டு ஆநந்தங் கொள்ளார் சிலரேயாவர். அறம், குதிரை, நிலம் முதலியன பகாப்பதங்களா மெனச் சிவஞான முனிவரரே கூறினுமென்னை? நங்கோவையைப் பெரிய சந்திரசேகரம் பிள்ளை யவர்களிடம் அவர்கள் முடித்து வைத்திருக்கும் காரணப் பதமுடிவுகளை நோக்கிக் காலஞ் சென்ற மகாவித்துவான் தாமோதரம்பிள்ளை யவர்கள் சித்தாந்தத்தி னேயே தங்கருத்துங் காலமுமெலா மூன்றிச்செலுத்திய அம்மா பாடிய முடையார்கூற்று இவ்விடயத்திற் கூற்றேயா மென்றனர். மகா நாவலர்களுளரேனும் அவர் தஞ்செய்கைகண்டு மறுபடிற் றுமஞ்சலேஞே?

"கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் கோக்கநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூதலமேம்
காக்கின்ற மன்ன கவியொட்டக் கூத்தநின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்க ளோதமிழ்ப் பாடிய பாவலரே"

என்ற தூக்குத் தூக்கற்பாலதே. தாதுக்களைக் கொண்டு பத முடிபு கண்டு "முடித்தற்கரிய வென்பாரு முளர்; முடிப்பான் பக்கம் வலியுடைத்து" எனவுரையாசிரியர் பெருந்தேவனூர் கூறியுள்ளா ரன்றே? இதனுற் குசை நுனிமதிகொடு பிரிக்கவகையறியாரே, அங்ஙனம் அரியவெனக் கூறும்வரென்ப தங்கை நெல்லியங்கனியிற் போதரும். இது நிற்க, ஐரவபாடையினுந் தேர்ந்து பட்டம்பெற்று வடமொழிப் பயிற்சியுங் கொண்டுற்ற தாம், ஆங்கிலத்தாரியற்றி யெழுதாவெழுத் தேற்றிய நன்முறைக் ளொப்பவே தாதுபதார்த்த விளக்க வகராதி யொன்றியற்றி வெளிப்படுத்தல் சாலநலமும் நீடூழி

பெயர் நின்று நிலவுதற் கேதுவுமாம். அங்ஙனஞ் செய்தல், பட்டா சாரியர் மோக்கமூலர் முதலியோ ரியற்றியனவும், இலிங்க பட்டீய மும், சிலப்பதிகாராதிகளிற் பகுதிப் பொருளுரையொடு காட்டப் பட்டனவும் வீரசோழியத் தங்ஙனே தெரிக்கப்பட்டனவும், தொல் காப்பியத்துற்றனவும்,

"விளக்கப் படுதலான் விளக்கெனப் படுமே"
"ஆழ முடையதா ழாழி யெனப்படும்"
"அவாவற வளித்தலா னறமெனப் படுமே"
"ஏயன் விகுதி யெய்தும் பிள்ளைக்கே"

எனலாதியவாய் பேரகத்தியமென வழங்குமதுவும், அறுவகை யிலக்கணம் ஏழாமிலக்கணம் என்னுமவையும், மேலும் பலவற்றொடு நாளதுகாறுஞ் சென்னையாதிய தலங்களினின்றும் பல்வகைப் பரீ க்ஷைகட்குப் பற்பல பண்டிதர்கள் வெளியிட்ட வுரைக்கணமும், ஆறுமுக நாவலரவர்கள் சௌந்தரநாயகம் பிள்ளை யவர்களாதியோர் அச்சிட்ட விலக்கணங்களிற் காணும் பகுபத முடிபுகளும், வேறும் பல்வேறு வகையினுற்ற வகையுங் கண்டோர்ந்தாய்ந்த தமக்கு மிகச் சுலபமாம். கீழேகாட்டிய எம்மூர்ப் பெரிய சந்திரசேகரம் பிள்ளை யவர்கண் முடித்து வைத்திருக்கும் பகுபத விளக்கமாஞ் சொற் பொருளாராய்ச்சியும் கண்ட தாமோதரம்பிள்ளையவர்கள் ஐயரொரு வரோடு சேர்ந்து முடித்து வைத்திருப்பதாயும் எமக்கெழுதிய கவிக் கடிதங்கள் சிலவற்று ளொன்றின் அச்சிடுவதாக விருப்பின் எமக் கனுப்புவதாக வாக்களித்திருந்த அச்சொற் பொருளாராய்ச்சி முடி வும், யாழ்ப்பாணத்துப் பண்டிதரொருவர் தாதுப்பொருட் காரணங் காட்டி அச்சேற்றியிருக்கும் சூடாமணி நிகண்டும் பெற்றுக்கோடல் நெடுநாட் சிரமத்திடைப்படுத்தாது விரைவின் வெளிப்படுத்தற்கா முதவியாமன்றோ? இங்ஙனம் தமது ஞாபகக் களஞ்சியத்துற்றவும் யோசிக்க வுடன் வெளியாமவையுஞ் சேர்த்தாமல்லோ மெனல் குறையன்றே. வேண்டுற்ற இத்தகையதோ ரகராதி சௌகரியமுற்ற தம்போலியரா னன்றே வெளிவந்து நிலவவேண்டுவது? இம்முயற் சியிற் பிரவேசித்து ஊக்கமுடன் சம்பூர்ணமாக்கிப் புத்தக ரூபமாய் வெளிப்படுத்தற்குத் தக்க பல வநுகூலங்களையும் எம்பெருமான் கிருபை பாலிக்குக தமக்கென வன்னோன்றிருவருளை யிரந்து பிரார்த் திக்கின்றோம்.

சி. வீரா. சாமிநாத பிள்ளை.

# ரூபாவதி

## செய்யுண் முதற்குறிப் பகராதி

[உடுக்குறியுற்றன மேற் கோட்பாக்களாம்]

# ரூபாவதி

## இராகப் பாட்டுக்களின் அகராதி



---

# தனிப்பாசுரத் தொகை

## பாசுர முதற்குறிப் பகராதி

---

முதற்குறிப்பு பக்கம்



---

## INDEX TO FIRST LINES

# மதிவாணன்

## செய்யுண் முதற்குறிப் பகராதி

[* உடுக்குறியுற்றன மேற்கோட் பாக்களாம்]



# நாடகவியல்

## நூற்பொருளகராதி

### குறியீடு

[ப: பக்கம்; சூ: சூத்திரம்; வ: வரி.]

## சூத்திர முதற் குறிப் பகராதி

## மேற்கோள் செய்யுட் முதற் குறிப் பகராதி

(உரையாசிரியர் எடுத்தாண்டவை)